2 பக்கங்கள் 15 காசுகள்

## இத்தாலியில் போராட்டங்கள் வெடிக்கின்றன

ரோம், ஜூலை. 10—

இத்தாலியநாட்டின்பல்வேறுபகுதிகளில் தொடர்ச்சியான வேலைநிறுத்தப் போராட்டங்களில் தொழிலாளர்கள் குதித்துள்ளனர். போராட்டம் நாடெங்கும் பரவுகிறது. அந்நாட்டின் 3 முக்கிய தொழிற்சங்கங்கள் போராட்டத்தை எப்படி வலுவாக்குவது என்பது பற்றி கூடிப்பேசவிருக்கின்றன. அரசாங்கத்தின் வரிக்கொள்கை, நிதிக்கொள்கையை எதிர்த்தே இவ்வேலைநிறுத்த போராட்டத்தை தொழிலாளர்கள் ஆரம்பித்துள்ளனர்.

தீக்

இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சி [மார்க்சிஸ்ட்] நாளிதழ்

கதிர் 12 மதுரை 13—7—74 சனி மலர் 162

...வ, நா...
...வேறு முக்கி...
30 (1) (2) பி... கீழ த...
பி...கப்பட்டுள்ள...
அண்ணு தி. மு. க. ...
...த்துள்ள "நேற்று—இ...
...னிமா திரையிடுவதையொட்டி சட்ட...
...ாதுகாக்கவே இந்த தடை உத்தரவு பிறப்...
...ள்ளதாம்.

### பன்சிலால் கும்பல் பண்ணிய கொடுமை

# சகோதரனையும் சகோதரியையும் நிர்வாணமாக்கி அவமதித்தனா

## அரியானு முழுவதும் கொந்தளிப்பு

சண்டிகர், ஜூலை 12—

**ஒரு கல்லூரித் தேர்தலில், முதலமைச்சர் மகன் தோற்றுப் போனுன் என்பதற்காக, வெற்றி பெற்ற மாணவனையும், அவனது சகோதரியையும் நிர்வாணமாக்கி, ஒரே ஜமுக்காளத்தில் சுற்றிக் கட்டி அடித்து வதைத்த கொடுமை, அரியானுவில் நடந்துள்ளது.**

**இதன் மீது சட்டசபையில் 4 மணி நேரம் முதலமைச்சர் பன்சிலால் விளக்கம் கூறியும் எதிர்க்கட்சிகள் ஏற்கவில்லை. இது பற்றிய விபரம் என்ன ?**

ஹரியானு மாநிலத்தில், பிவானி மாவட்டத்தில், முதலமைச்சர் பன்சிலால தொகுதியான தோஷம் தொகுதியில் ஓர் கிராமம். அதன் பெயர் ரேவாஸா!

சமீபத்தில்,

இந்தக் கிராமத்தில் ஒரு குடும்பத்துக்கு இழைக்கப்பட்ட போலீஸ் கொடுமையையும, அருவருக்கத்தக்க அவமானத்தையும் சிந்தித்துப் பார்க்கவே முடியவில்லை.

இது நாடா அல்லது காட்டுமிராண்டிகள் வாழும் காடா?-என்று வெட்கித் தலை குனியக் கூடிய குரூர நிகழ்ச்சிகள் இங்கு நடந்தன.

இந்த நிகழ்ச்சி பற்றி ஹரியாணு மாநிலமே கண்டனக குரல் எழுப்பிறறு. சட்டசபையில் முதலமைச்சர் பன்சிலால் மீது கடும் குற்றச் சாட்டுகள் எழுந்தன,

இதன் மீது முதலமைச்சர் பன்சிலால் கடந்த 9-ந் தேதி நடந்த சட்டசபைக் கூட்டத்தில் 4மணி நேரம்சமாதானம் கூறினுர். "பாதிக்கப்பட்ட அந்தக் குடும்பம் என் தொகுதியில் இருப்பதால், அது எனது சகோதரி போல, சகோதரர் போல, மகன் போல நான் கருதுகிறேன்' '—என்றெல்லாம் பேசினுர்.

எதிர்க் கட்சிகள் அரசியல் நோக்கத்தோடு குற்றம் சாட்டுவதாகக் கூறினுர்.

"போலிஸாரால் பாதிக்கப்பட்ட அந்தக் குடும்பத்தின் கோபாவேசத் தாக்குதலுக்குப் பயந்து, எனது மகன் கனடா நாட்டுக்கு தப்பி ஓடி விட்டதாகக் கூறப்படுவதும்—நானும் பயந்து போய்மருத்துவவிஞ்ஞான ஆராய்ச்சிக் கழகத்துக்குள் ஓடிப்போய் ஒளிந்து கொண்டுவிட்டதாகக் கூறப்படுவதும பொய்ப்பிரச்சாரம்" என்றும் கூறினுர்.

மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி எம். பி. தோழர் ஜோதிர்மாய்பாசுவும், மற்றும் பாரதீய கிராந்திதளம், ஸ்தாபன காங்கிரஸ் முதலிய கட்சிகளின் தலைவர்களும். ரேவாஸா கிராமத்துக்குச் சென்று நேரில் விசாரணை நடத்திவிட்டு, விடுத்த அறிக்கைகளில் முரண்பாடுகள் இருப்பதாகவும் கூறினுர்.

"சத்தியமாக என்னுடைய மகன் சுரீந்திர சிங்குக்கும், இந்தச் சம்பவத்திற்கும் சம்பந்தமே இல்லை"—என்றும் கூறினுர்.

### என்ன நடந்தது?

இவ்வளவு கொந்தளிப்புகளுக்கும் குமுறல்களுக்கும் காரணம் என்ன?

அரியானு கல்லூரி தேர்தலில் ரேவாஸா கிராமத்தைச் சேர்ந்த ஒரு மாணவன் வெற்றிபெற்று விட்டான்.

அந்தத் தேர்தலில் போட்டியிட்ட முதலமைச்சர் பன்சிலாலின் மகன் சுரீந்திர சிங் தோற்றுப் போனுன்.

சாதாரண கிராமத்துக்காரன், அந்தஸ்து இல்லாதவன். பாடுபட்டு வாழ்பவனின் மகன், ஒரு மாநிலத்து முதலமைச்சரின் மகனை எதிர்த்துப் போட்டியிடுவதா? போட்டியிட்டு வெற்றியும் பெறுவதா? தோல்வியைச் சகித்துக் கொண்டு சும்மா இருப்பதா?

ஆத்திரத்தால் அனல் கக்கினுன் என்றும்-தந்தை பன்ஷிலாலிடம், பழிவாங்கியே தீரவேண்டுமென்று குமுறினுன் என்றும் கூறப்படுகிறது.

அவ்வளவுதான்! தொலைபேசிஎண்கள் சுழன்றன.

காவல்துறை தலையை ஆட்டிற்று. காட்டுப்பாதைகளிலே வேன்களும ஜீப்புகளும் பறந்தன. ரேவாஸா கிராமம் முற்றுகைக்கு உள்ளாயிற்று.

### உடன்பிறந்தவர்களை நிர்வாணமாக்கினுர்கள்

ஊரிலுள்ள அத்தனை பேருக்கும் அலற அலற அடி!

வெற்றி பெற்ற கல்லூரி மாணவனின் வீட்டுக்குள் மிருகங்கள் பாய்ந்தன. ஒரே அடி! மாணவனின் 70 வயது அன்னை அங்கேயே செத்து விழுந்தாள்..

அந்த மாணவனைப் பிடித்துகண்ணு மூக்குத தெரியாமல் அடித்தனர். உடல முழுவதும் இரத்தம் பீறிட பூட்ஸ் காலால் மிதிததனர்.

கடைசியாக, அந்த மாணவனின் உடைகளைக் களைந்து நிர்வாணமாக்கினர். அவனது உடன்பிறந்த சகோதரியையும் இழுத்து வந்து நிர்வாணமாக்கினர்.

நிர்வாணக் கோலத்துடன் அவ்விருவரையும் ஒரே ஜமுக்காளத்துக்குள் கட்டிச் சுருட்டி—புரட்டி புரட்டி அடித்தனர்.

இந்தக் காட்டுமிராண்டிச் செயலை பார்த்து ரசிக்கும்படி கிராம மக்களை இழுத்து வந்து நிறுத்தினர்.

தாய்க்கும் தாரத்துக்கும் வேறுபாடு தெரியாத மிருகங்கள், வேறு எப்படித் தான் நடந்து கொள்ளும்?

### நாடெங்கும் குமுறல்

இந்தக் கோர நிகழ்ச்சி பற்றியும்—இதில முதலமைச்சர் பன்ஷிலாலும் அவரது மகனும நேரடியாக ஈடுபட்டிருப்பது பற்றியும்—செய்திகள் அரியானு முழுவதும காட்டுத் தீ போல் பரவி, மக்களிடையே கோபாவேசத்தை மூட்டிவிட்டது

இதைப்பற்றி எதிர்க்கட்சிகள் கண்டனம் தெரிவித்தபோது, "இது சின்ன விஷயம். அரசியல் நோக்கத்துக்காக வேணுமென்றே பழிபோடுகிருர்கள்"— என்று ஆரம்பத்தில் பன்ஷிலால் தட்டிக்கழித்தார்.

கொந்தளிப்பு மேலும் மேலும் அதிகமாகிவிடவே, சட்டசபையில் 4 மணி நேரம் விளக்கம் சொன்னுர். "ரேவாஸா குடும்பத்தினர், என் தொகுதியினர்,...என் சகோதரி...என் சகோதரன்...என் மகன்" என்றெல்லாம் சொன்னுர்.

ஆனுல், எல்லா எதிர்க்கடசிகளும், நீயும் உன் மகனும் யோக்கியசிகாமணிகளாக இருந்தால், பகிரங்க விசாரணைவை"—என்கிருர்கள்.

பன்ஷிலாலோ "நானே மறு விசாரணை நடத்துகிறேன்"—என்ருர்.

எதிர்க்கட்சிகள் சம்மதிக்கவில்லை.

---

### உணவு வழங்க வக்கில்லாத அச்சுதர் ஆட்சியில்

## எம். எல். ஏக்கள் மீது தாக்குதல்

கோழிக்கோடு, ஜூலை 11—

கேரளமெங்கும் நேற்று எதிர் கட்சி தொண்டர்கள் இந்திய உணவுக் கார்ப்பரேஷன் கிட்டங்கிகள் முன் பிரம்மாண்ட ஆர்ப்பாட்டம் கடத்தினர். பாலக்காட்டில் ஆர்ப்பாட்டம் நடத்தியவர்கள் மீது கடுமையான தடியடி நடத்தப்பட்டது. 4 எம். எல். ஏக்கள் படுகாயமுற்றனர்.

4½ அவுன்ஸ் உணவு ரேஷன் போதாது. உணவு கிட்டங்கிகளில் தேங்கிக் கிடக்கும் உணவுப் பொருட்களைக் கொண்டு 12அவுன்ஸ் ரேஷன் வழங்க வேண்டும் என்று வலியுறுத்தி பாலக்சாடு உணவு கார்ப்பரேஷன் கிட்டங்கி முன் ஆயிரக்கணக்கான மக்கள் ஆர்ப்பாட்டம் நடத்தினர் மிருகவெறி கொண்ட போலீசார் ஆர்ப்பாட்டத்தினர் மீது தடியடி நடத்தினர்.

இதில் 4 எம் எல் ஏக்கள் உட்பட நூற்றுக்கணக்கானேர் காயமடைந்தனர்.

காயமடைந்தவர்களில் மார்க்சிஸ்ட் எம். எல். ஏக்களான சி. ஜி. பணிக்கர், பி. குஞ்சன், கிருஷ்ணன் ஆகியோரும், சோசலிஸ்ட் எம். எல். ஏ. சிவராமபாரதியும் உட்படுவர்.

தோழர் கிருஷ்ணன், சிவராமபாரதி ஆகியோரை ஆஸ்பத்திரியில் சேர்ப்பதற்குப் பதிலாக போலீசார் கைது செய்து சிறையில் அடைத்துள்ளனர்.

---

## சிலி தலைவர் கார்வலன் மீது பாசிஸ்டு விசாரணை நாடகம்

வல்பரைசோ (சிலி) ஜூலை 12—

சிலி ஜனதிபதி அலெண்டேயைக் கொலை செய்துவிட்டு, ஆட்சியைக் கைப்பற்றிக்கொண்ட இராணுவ வெறிக்கும்பல், இப்பொழுது சிலி நாட்டின் கம்யூனிஸ்ட் கட்சி பொதுச் செயலாளர் லூயி கார்வலான் மீது விசாரணை நாடகம் நடத்த முற்பட்டிருக்கிருர்கள்.

இராணுவக் கும்பலின் தலைவன் ஜெனரல் பினேஷே, "இந்தவிசாரணை சுருசகமாக, உறுதியாக, எதிர்பாராத முறையில் நடைபெற வேண்டும"—என்று உத்தரவிட்டுள்ளான்.

விசாரணை விபரமாக நடைபெற்ருல். உண்மையுறிந்து ஆடசிக்கு எதிராக மககள் கொந்தளிப்பார்கள் என்ப்து அவனது கருத்து,

### சித்தரவதைகள்

அலெண்டேக்கு ஆதரவாக இருந்த விமானப்படை வீரர்களை இராணுவக் கோர்ட்டில் விசாரித்த பொழுது, பல்வேறு சித்திர வதைகளுக்கு ஆளானுர்கள். பாசிஸ்டு மிருகங்கள். அவர்கள் மீது மின்சாரத்தைப்பாய்ச்சினர்நகங்களில் ஊசிகளை ஏற்றின; சிகரட்கங்குகளால் சுட்டன: உண்மையைக் கக்கவைக்கும் மருந்து என்ற பெண்டோதாலை இன்ஜெக்ஷன் செய்தன,

### வாழ்க்கையை நேசிக்கிறேன்

கூண்டிலே நிறுத்தப்பட்டிருக்கும் தோழர் கார்வலன் அவர்கள், தன்னைச் சந்தித்த பத்திரிகை நிருபரிடம், "நான் வாழ்க்கையை நேசிக்கிறேன். ஆனுல், மக்களை முன்னேற்றும் ஒரு நியாயமான லட்சியத்திற்காகச் சாகவேண்டுமெனில் மரணமும் எனக்குத் திரணமாகும்" என்று கூறினுர்.

---

## மீட்டிங்! ஈட்டிங்!! சீட்டிங்!!!

லடசுமணபுரி, ஜூலை. 12—

மந்திரி மார்களின் அன்ருட வேலைகள் எந்த லட்சணத்தில் இருக்கின்றன என்பதை உத்திரப பிரதேச மேல் சபையில், ஒரு காங்கிரஸ் எம். எல். சி. சந்திக்கு இழுததார். "கூடுவதும, தின்னுவதும், ஏமாற்றுவதும" தான் இந்த மந்திரிகளின் வேலையாகி விடடது என்பதை, ஆங்கிலத்தில் அழகுபட,

**"மீட்டிங்! ஈட்டிங்! சீட்டிங்!"** ஆகிய வேலைகளோடு மந்திரிகள் தங்களைச் சுருக்கிக் கொள்கிருர்கள்"—என்று மணிச் சுருக்கமாக மந்திரிகளைச் சந்திக்கு இழுத்தார். அநத காங்கிரஸ் உறுப்பினரின் பெயர் தயானந்த வியாஸ்.

பட்ஜெட் மீது நடந்த விவாதத்தில் அவர் மேலும் பேசுகையில் :—

"புதிய காங்கிரஸ் மந்திரிசபை ஆட்சிக்கு வந்தபோது, ஏழை மக்களைக் கைதூககிவிடப் போவதாக எவ்வளவோ வாக்குறுதிகளை அள்ளி விட்டார்கள். ஆனுல், இதுவரையில் ஒன்றுமே செய்யவில்லை. பபூ! பஹூகுணுவும் இவ்வவு தானு? என்ற முடிவுக்கு மக்களும வந்து விட்டார்கள, இன்று மந்திரிகளை நாம் பார்க்க வேண்டுமானுல், பத்திரிகைகளில் படம் போட்டு மகிழ்வதற்கு பததிரிகையாளர்களைக் காக்காப் பிடிக்க சுற்றிக் கொணடிருப்பதைப் பார்க்கலாம்; பணம் கறக்க முதலாளிகளைச் சுற்றிக் கொண்டிருப்பதைப் பார்க்கலாம்.

**எதிர்காலம் ஒளிமயமாக** இருக்குமா என்று கைகளை நீட்டி, ஜாதகத்தை காட்டி, சோதிட நிபுணர்களைச் சுற்றிக் கொண்டிருப்பதையும் பார்க்கலாம்"—என்ருர்.

---

### மத்திய அரசு ஊழியர்களை

## அரசு ஏமாற்ற முயற்சிக்கிறது

புதுடெல்லி, ஜூலை. 10-

மத்திய அரசு ஊழியர்களுக்கு பஞ்சப்படிகொடுக்க வேண்டியது சம்பந்தமாக மாநில அரசுகளை மத்திய அரசு கலந்தாலோசிக்கப் போகிறதாம்.

மத்திய அரசு ஊழியர்களுக்கு விலைவாசி உயர்வுக்கேற்ப பஞ்சப்படியை உயர்த்தினுல் மாநில அரசு ஊழியர்களும், மாநிலஅரசுகளிடம்அதுபோல தங்களுக்குமகொடுககவேண்டுமஎன வற்புறுததுகிருர்கள்என்றும் அதனுல மாநில அரசுகளுக்கு நெருக்கடி ஏறபடுகிறது என்றும, அவ்வரசுகள் குறறஞ்சாட்டுகிருர்கள் என்ற காரணத்தைககாட்டி மத்திய அரசு ஊழியர்களுக்கு கொடுக்கவேணடிய பஞ்சப்படி உயர்வை மறுக்கமுயற்சிக்கிறது மத்திய அரசு.

### விலைவாசிப் புள்ளி உயர்வு

உபயோகிப்பாளர் விலைவாசிப்புள்ளி கடந்த மார்ச்சில் 243ஐ தாண்டி ஏப்ரலில் 255 ஐ அடைந்தது.

இதன் அடிப்படையில், 3 வது சம்பளக்கமிஷன் முடிவுப்படி, ஜூன் மாதத்திலிருந்து புதிய பஞ்சப்படி உயர்வு மத்திய அரசு ஊழியர்களுக்கு கொடுக்கவேண்டும்.

ஆனுல், மாநில அரசுகளையும, அவைகளின் ஊழியர்களையும் காரணமாகக் காட்டி பஞ்சப்படி உயர்வை தட்டிக்கழிக்க மத்திய அரசு முயற்சிக்கிறது.

சமீப அவசரச்சட்டப்படியின் கூட 50 சதவீத பஞ்சப்படி உயர்வு ஊழியர்களுககு பணமாகத்தர வேண்டும். மீதியை அவர்கள துசேமிப்பில் சேர்க்க வேண்டும்.

### மத்திய அரசின் முயற்சி

ஆனுல், அவசரச்சட்டத்தையே அவர்கள் ஏற்க மறுக்கும்போது மத்திய அரசோ, மாநில அரசுகளை காரணம்காட்டி மத்திய அரசு ஊழியர்களுக்கான பஞ்சப்படி உயர்வையே மறுக்கமுயற்சிக்கிறது. 5வது சமபளக்கமிஷனின் பஞ்சப்படி உயர்வு பற்றியமுடிவை குப்பைத்தொட்டியில் போட முயற்சிக்கிறது.

---

## 'கபூர் வேண்டாம்'

### பீகாரில் காங்கிரசார் கையெழுத்து வேட்டை

பாட்ஞ, ஜூலை. 11—

பீகார் மாநிலத்தில் கபூர் தலைமையிலான ஊழல் அரசை பதவி விலகக்கோரி எதிர்கட்சிகள்கிளர்ச்சிநடத்துமவேளையில் கபூரைவெளியேற்றவேண்டும என வலியுறுத்தி காங்கிரசார்களே கையெழுத்து வேட்டை நடததுகின்றனர்.

கபூர் முதலமைச்சராக நீடிக்கலாகாது என 32 இந்திரா காங்கிரஸ் எம். எல். ஏ. க்கள்கையெழுத்திட்டுள்ளனராம்.

---

### வரிஏய்ப்பு மன்னன் கம்பெனியில் மரகதம் சந்திரசேகருக்கும் பங்கு?

சென்னை ஜூலை. 11—

சென்னையில் ஒரு பில்டிங் காண்டிராக்ட்கம்பெனி அதிபர் இருக்கிருர். அவர்பெயர் ஜெ. பி. பரமானந்தம்

"இவர் வருமானவரி மோசடி நடத்தியதையொட்டி, வருமானவரி அதிகாரிகள் அக்கம்பெனியில் திடீர்ச்சோதனை நடத்தி வருமான வரி ஏய்ப்பு தஸ்தாவேஜகளை கைப்பற்றினர்" என்று ஒய். பி. சவான் சென்றமே மாத மத்தியில் பாராளுமன்றத்திலேயே அறிவித்தார்.

இந்த பரமானந்தத்தின் கம்பெனியில்இந்திரா காங்கிரஸ் பொதுச்செயலாளர் மரகதம் சந்திரசேகருக்கும் பங்கு உள்ளதாம்.

இந்தச் சந்தேகத்தை இந்திரா காங்கிரஸ் ஆதரவு வார இதழ் 'பாரதமே கிளப்பியுள்ளது'என்பது குறிப்பிடத்தக்கது.

---

### இயந்திரத் தொழிலாளர்களின்

## சம்பளமும் அதன் உண்மை மதிப்பும்

(1961=100)

| வருடம் | சம்பளம் | சம்பளத்தின் உண்மை மதிப்பு |
|---|---|---|
| 1962 | 106 | 103 |
| 1963 | 109 | 103 |
| 1964 | 114 | 94 |
| 1965 | 128 | 97 |
| 1966 | 139 | 95 |
| 1967 | 151 | 91 |
| 1868 | 160 | 94 |
| 1969 | 171 | 101 |
| 1970 | 180 | 101 |
| 1971 | 181 | 99 |

ஆதாரம்: இந்திய தொழிலாளர் புள்ளி விபரம், 1973 (இந்திய அரசு)

# ...பொழுது ...வைப்பதும் ...ப்பொழுது?

...ம் ஏப்ரல் 1ந் தேதி முதல் 5வது ஐந்தாண்டு ...வங்கி விட்டதாக நினைப்பு. அந்தத் திட்டத்திற் ...தாவேசு இன்னும் இறுதியாக்கப்படவில்லை. அது ... 1974-ம் ஆண்டு முடியும் பொழுதும் அது ...க்கப்படாது என்று இப்பொழுது அறி ...கிறது.

...மக்கு இதில் எந்த வியப்பும் இல்லை. 1974 முடிந்த ...ம் திட்டத்தின் இறுதி அளவும், உள்ளடக்கமும் ...து போனாலும் நமக்கு வியப்பு ஒன்றும் ஏற்படாது ... அரசே விலைகளை ஏற்றி வருவதால—உருக்கு, ... வனஸ்பதி, உணவு தானியம், ...ள் ஆகியவை சில உதாரணங்கள் — தினசரி ...ஏறிக் கொண்டே இருக்கின்றன. அரசு வேண்டு ... கையாளும் பணவீக்க ஏற்பாடும் இந்த நிலை ... கொண்டே இருப்பதற்கு பெரும் பங்கு வகிக் ... இந்நிலையில் திட்டத்தின் அளவு ஒவ்வொரு ... மாறிக் கொண்டே தானே இருக்கும்? அதன் ...வைப் பொறுத்து, அதன் உள்ளடக்கமும் மாறிக் ...ண்டேதானே இருக்கும்?

அதே சமயத்தில் உலக வங்கியின் அதிகாரிகள் ...ரும் மத்திய அரசின் உயர்மட்ட அதிகாரிகளும் ...ர்ந்து தயாரித்துள்ள ஒரு அறிக்கை இருக்கிறது. அது ...ரகசியம்'' என்று சொல்லப்பட்டது! ஆனால் அதை ...நாட்டின் பொருளாதாரத்தின் உண்மை பலவீனம் ...வெளிப்பட வேண்டும் என்று அக்கறை கொண்ட ''உலக வங்கிகளை'' நிர்வகிக்கும் அமெரிக்கர்கள் வெளிப் ...படுத்தி விட்டார்கள். அந்த அறிக்கையின்படி இந்த ... ஆண்டுத் திட்டத்திற்கு (1974—79) இந்தியாவுக்குத் ...தேவையான அந்நிய ''உதவி'' (கழுத்தை அறுக்கும் ...கடனுக்குத்தான் இந்தப் பெயர்!) 1200 கோடி டாலர்கள்— அதாவது சுமார் ரூ. 9600 கோடி, இதில் சோசலிச நாடு ...களிடமிருந்து எதிர்பார்க்கப்படுவது ரூ. 1100 கோடி. ...இதைக் கழித்தால் மேற்கத்திய ஏகாதிபத்திய நாடுகளி ...லிருந்து—இதில் பெரும் பகுதி அமெரிக்கா தருவதுதான்— ...தான, 8500 கோடியை பெறுக வேண்டும்!

சென்ற 4 ஐந்தாண்டுத் திட்டங்களில் பெற்ற ...த்தக் கடனைக் காட்டிலும் இந்த ரூ. 8500 கோடி என ... சற்றுக் கூடுதலானது! இதில் எந்த அளவு எப் ...பொழுது கிடைக்கும் என்பதைப் பொறுத்தே நமது ...ட்டின திட்டம் உருவாக முடியும்! எந்த அளவு அன் ...னியக் கடன்களை நம்பி நமது நாட்டின் பொருளாதாரம் ...ற்கிறது என்பது உலகத்துக்கு ''வெளிச்சம்'', நமது ...மக்களுக்கு இந்த உண்மைகளைச் சொல்ல நம்மைத் தவிர ...வேறு ஏடும இல்லை!

அதனால்தான் பிள்ளை பெறுவது எப்போது? பெயர் ...சூட்டுவது எப்பொழுது? என்று கேட்கிறோம். ''மலட்டு''க் ...கொள்கைகள் நீடிக்கும வரை பிள்ளையும் வராது, பெயர் ...வைக்கும் பிரச்னையும் வராது,

# 5-வது திட்டம் அந்தரத்தில் சுற்றுகிறது

புதுடெல்லி, ஜுலை 10—
ஐந்தாவது திட்டத்தைப் ...பற்றியோ அல்லது அதன் ...முதலாண்டான 74—75-ம் ...ஆண்டுத் திட்டத்தைப் ...பற்றியோ எந்த முடிவுக்கும் ...மத்திய அரசாங்கம் வர ...முடியவில்லை. எனவே அத் ...திட்டம அந்தரத்தில்சுற்றிக் ...கொண்டிருக்கிறது. 5-வது ...திட்டத்தின் முதலாண்டா...ன 74—75-ம் ஆண்டுத் ...திட்டத்தில் முக்கியத் ...தொழில்களை எப்படிக் காப் ...பாற்றுவது; உற்பத்தியை ...எப்படி பெருக்குவது என்பது ...பற்றி அரசாங்கம் ஆராய்ச்சி ...செய்து கொண்டிருக்கிற...து.

## ...அவசரச்சட்டத்தின் விளைவு

...இந்நிலையில் 74-ம ஆண்டு ...இறுதிக்கட்டத்தை நெருங் ...கிக்கொண்டிருக்கிறது. ...வது திட்ட நகலையே ...ட்டது வீழ்ந்திக்கொண்டி ...ருக்கும பணவீக்கமும். விலை ...ச்சி உயர்வும் அரசிற்கு ...க கவலையை அளிக்கிற...து.

...தற்போது பண வீக்கத் ...தைத்தடுப்பதற்கென ஊதிய ... முடக்கச் சட்டம் ...என்றபெயரில் அரசாங்கம் ...கொண்டுவந்த அவசரச் ...சட்டத்தின் விளைவுகளைக் ...கண்டுதான் 74—75-ம் ...ஆண்டுக்குரிய திட்டமே ...இறுதியாக்கப்படும் என ...திட்டக்கமிஷன் உணர்ந் ...துள்ளதாகத்தெரிகிறது.

...இதற்கு அடிப்படையாக ...பெறவிருக்கும் அறு...வடையில் நல்ல விளைச்சல ...கிடைக்க வேண்டும் என்றும ...திட்டக்கமிஷனால் எதிர் ...பார்க்கப்படுகிறது

## ...திட்டக்கமிஷனின் மகிழ்ச்சி

...74—75-ம ஆண்டு திட் ...டத்தை செயல் படுத்த ...த் தொடங்கிய போதுதல், புதிய கட்டி...டங்கள் கட்டுதல் போன்ற அவசியமில்லாத திட்டங்கள் நிறுத்தப்பட வேண்டும் என திட்டக்கமிஷன் கருது கிறது.

மேலும், ஏற்கெனவே ஒப்புக்கொண்டதற்கு மேலாக மக்களின் தலையில் வரியை ஏற்றி சுமார் 227 கோடி ரூபாய் நிதியை திரட்ட மாநில அரசுகள் மேற்கொண்டுள்ள முயற்சியை திட்டக்கமிஷன் வரவேற்றுள்ளது.

## மின் தொழிலாளர் மாநாட்டுக்கு பஸ், லாரிகள்

திருநெல்வேலி, ஜுலை, 12—
இங்கு நடைபெறும் மின்சாரத் தொழிலாளர் மத்திய அமைப்பின் 0வது மாநாட்டையொட்டி 24ந் தேதியன்று நடைபெறும் அணிவகுப்பில் கலந்து கொள்ள பல்வேறு பகுதியிலிருந்து லாரிகளில் மின் தொழிலாளர்களும், ஊழியர்களும் வருகிறார்கள்.

விளாத்திகுளம், ஒட்டப்பிடாரம், புதூர், நாகலாபுரம் ஆகிய பகுதிகளிலிருந்து 3 லாரிகளிலும், அம்பா சமுத்திரத்திலிருந்து ஒரு பஸ்சிலும், கோவில்பட்டி, சங்கரன்கோவில், சிவகிரி, புளியங்குடி ஆகிய பகுதிகளிலிருந்து 6 லாரிகளிலும் நூற்றுக்கணக்கான தோழர்கள் வருகிறார்கள்.

தென்னாற்காடுமின்திட்டத்திலிருந்து3பஸ்களில்200க்கு மேற்பட்ட தோழர்கள் புறப்பட்டு வருகிறார்கள்.

## ...ட்டாரம் காலியாகிறது

தக்கலை, ஜுலை. 12—
கன்னியாகுமரி மின்திட்டம் தக்கலை வருவாய் பிரிவில் வலதுகம்யூனிஸ்ட் சங்க ...ன சம்மேளனத்தின் துரோகத்தைப் புரிந்து கொண்ட ஊழியர்கள் பலர் சி ஐ டி யூ வில் இணைந்துள்ள மின்சார ஊழியர் சங்கத்தில்சேர்ந்துள்ளனர். இங்கு ஊழியர் சங்கம் (125 எம். டி. எஸ்.) இவ்வருடம் ஜனவரி மாதத்தில் துவங்கப்பட்டு தற்போது பெரும் பான்மை பலத்துடன் விளங்குகிறது.

மின்சாரத் தொழிலாளர் மத்திய அமைப்பின் இரண்டாவது மாநில மாநாடு நெல்லையில் நடைபெறும்.

இத் தருணத்தில் இந்த நிகழ்ச்சி இப்பகுதி தொழிலாளர் மத்தியில் உற்சாகத்தை ஏற்படுத்தியுள்ளது. தக்கலை, குழித்துறை பகுதிகளில் மாநாட்டு வேலைகள் தீவிரமாக நடந்து வருகிறது.

தக்கலை டிவிசன் ஊழியர்கள் ஒரு லாரியிலும், நாகர்கோவில் டிவிசன் ஊழியர்கள் ஒரு லாரியிலும் 14-7-74 காலை 5 மணிக்கு ஊர்வலத்தில் கலந்து கொள்ள நெல்லைக்குப் புறப்படுகிறார்கள்.

## ...ங்கி சட்டத்தை எதிர்த்து
# ...ன்றுபட்ட போராட்டம்
## ...ங்களுக்கும் ஆர். உமாநாத் அறைகூவல்

சென்னை- ஜுலை. 9—
மத்திய இந்திரா அரசின் ஊதிய முடக்க அவசரச் சட்டத்தை எதிர்த்து முறியடிக்க சங்க வித்தியாசமின்றி ஒன்றுபட்ட போராட்டத்தில் இறங்க வேண்டும் என்று தமிழக சி ஐ டி யூ பொதுச் செயலாளர் தோழர் ஆர். உமாநாத் அனைத்துத் தொழிற்சங்கங்களுக்கு அறைகூவல் விடுத்துள்ளார்.

அவர் விடுத்துள்ள ஓர் அறிக்கையில் கூறியிருப்பதாவது:—

கூடுதல் ஊதியங்கள் (கட்டாய டெபாஸிட்) அவசர சட்டமானது பணவீக்கத் தடுப்பின் பெயரால் தொழிலாளி வர்க்கத்தின் ஊதியம், கிராக்கிப்படி, போனஸ் போன்றவற்றின் மீது மத்திய அரசு தொடுத்துள்ள நேரிடையான தாக்குதலாகும்.

கம்பெனிகளின் டிவிடெண்ட் மீது போடப்பட்டுள்ள தற்காலிக கட்டுப்பாடு என்பது மேலே குறிப்பிட்டுள்ள தாக்குதலை மறைப்பதற்கான கண் துடைப்பேயாகும்.

ஏராளமான நோட்டு அச்சடிப்பு, மக்கள் உபயோகிக்கும் பொருட்கள் மீதான வரிவிதிப்பு, அவ்வப்போது மத்திய அரசே பொருட்களின் விலையை உயர்த்துவது, பெரும்முதலாளிகளுக்கும் நிலச்சுவான்தார்களுக்கும் மேலும் மேலும் சலுகைகள் கொடுப்பது போன்ற கொள்கைகளைமத்திய அரசு தொடர்ந்து அமுல்படுத்துவதினால் இந்த அவசரசட்டத்திற்கு பிறகும், பணவீக்கம் பெருமளவு தொடரும்.

இந்த நிலையில் ஊதியங்கள் (கட்டாய டெபாசிட்) அவசர சட்டமானது, அது கூறுவதுபோல் தொழிலாளிகளின் உண்மைஊதியத்தை வீழ்ச்சியிலிருந்து பாதுகாப்பதை விட மேலும் விழச் செய்து தொழிலாளிகளின் வாழ்க்கையை மேலும் சீர்குலைக்கும். ஆகவே, தொழிலாளிகள், நடுத்தர வகுப்பினர் போன்றவர்களைப் பொறுத்த மட்டில் கூடுதல் ஊதிய அவசரச்சட்டத்தை வாபஸ் பெறவைக்க மத்திய அரசுக்கு நிர்ப்பந்தம் கொடு... ஒன்றுபட்டுப் போரா... தொழிற்சங்க வித்தியா...மின்றி எல்லாத் தொழிற்சங்கங்களும் முன்வர வேண்டும.

இவ்வாறு அந்த அறிக்கையில் கூறப்பட்டுள்ளது.

## என்.ஜி.ஓ.சங்கம்

மத்திய இந்திரா அரசின் ஊதிய முடக்க அவசரச் சட்டத்துக்கு நாடெங்கும் கருத்தாலும், கரத்தாலும் பாடுபடக்கூடிய அனைத்துப் பகுதி உழைப்பாளர்களும் கடுமையான கண்டனம் தெரிவித்து வருகின்றனர்.

இந்த ''கறுப்புச் சட்டத்தை'' மத்திய அரசு வாபஸ்பெறும்வரை போராட்டத்தைத் தவிர வேறு வழி இல்லை என்று தமிழ்நாடு என்.ஜி.ஓ.க்கள்சங்க மாநில நடவடிக்கைக்குழு எச்சரித்துள்ளது. இதன் தலைவர் ஆர்.ஏ. கூடலிங்கமும்; கன்வீனர் எப்.எம் குத்புதீனும் ஓர் அறிக்கை விடுத்துள்ளார்கள்.

''மத்திய ஊழியருக்குச் சமமாக ஊதிய உயர்வு வேண்டுமென மாநில அரசு ஊழியர்கள் கோருகையில், அது மாநில விவகாரம் என்று கூறிவந்த மத்திய அரசு, இப்போது மாநில அரசு ஊழியரது ஊதிய உயர்வை முடக்குவது நியாயமல்ல'' என்று அந்த அறிக்கையில்சுட்டிக்காட்டியுள்ளனர்.

## பட்டதாரி ஆசிரியர் கழகம்

பட்டதாரி ஆசிரியர் கழக மதுரை மாவட்டச் செயலாளர்எம்.பாண்டிவிடுத்துள்ள அறிக்கையில், ஏற்கனவே விலைவாசி உயர்வால் கஷ்டப்படும் ஆசிரியர்கள் மேலும் கஷ்டப்படுவார்கள் என்றும், இந்தச் சட்டத்தை எதிர்த்து ஆசிரியர்களும், மற்றவர்களும் ஓரணியில் திரளவேண்டும் என்றும் குறிப்பிட்டுள்ளார்.

## மின்தொழிலாளர் சங்கம்

20 ஆயிரம் மின் தொழிலாளர்களைப் பிரதிநிதித்துவப்படுத்தும் தமிழ்நாடு மின்சாரத் தொழிலாளர் மத்திய அமைப்பின்பொதுச் செயலாளர் து. ஜானகிராமன் விடுத்துள்ள அறிக்கையில் மத்திய அரசின் இந்த அவசரச் சட்டத்தை வன்மையாகக் கண்டித்துள்ளார்.

இந்தச் சட்டத்தை எதிர்த்து முறியடிப்பதற்கான போராட்டச் செயல்த் திட்டம்,நெல்லையில் 13,14 தேதிகளில் நடக்கும் மாநில மாநாட்டில் வகுக்கப்படும் என்றும் கூறியுள்ளார்.

## அஞ்சல் ஊழியர் கண்டனம்

கடந்த 7-ந்தேதியன்று நாகர்கோவிலில் கூடிய குமரி மாவட்ட 3-ம் பிரிவு அஞ்சல் ஊழியர் சங்க செயற்குழுக்கூட்டம், ஊழியர்கள் அனைவரும் விழிப்பாயிருந்து இந்த ஊதியமுடக்க சட்டத்தை முறியடிக்க வேண்டும் என்று கேட்டுக் கொண்டுள்ளது.

# உ. பி. யில் விவசாய தொழிலாளர்களுக்கும் கூலி முடக்கம்

ஊதிய முடக்கம் தொழிலாளர்களுக்கு மட்டுமல்லாமல், விவசாயத் தொழிலாளர்களுக்கும் கொண்டு வரப்படுகிறது.

இது விவரம் வருமாறு:—

உத்திரப்பிரதேசத்தில் விவசாயத் தொழிலாளர்களுக்கு கூலி இனிமேல் உயர்த்தப்படமாட்டாது என்று உ. பி. சர்க்கார் அறிவித்திருக்கிறது.

உ. பி. அரசாங்கத்தின் இந்த சம்பள முடக்க அறிவிப்பிற்கு மார்க்சிஸ்ட் கட்சியின் தலைமையிலுள்ள விவசாய சங்கமும், வலது கம்யூனிஸ்டு விவசாய சங்கமும் கடும் எதிர்ப்பு தெரிவித்துள்ளன.

விவசாயத் தொழிலாளர்களுக்கு தினமும் ரூ. 3 அல்லது 4 தான் கூலி கொடுக்கப்படுகிறது. அவர்களுக்கு பஞ்சப்படியும் கிடையாது. இந்நிலையில் அவர்களுடைய கூலியை முடக்கியிருப்பது மிகவும் கொடுமையாகும். எனவே இதனை எதிர்த்து அனைவரும் போராட வேண்டும் என்று இரண்டு விவசாய சங்கங்களும் அறிக்கை விட்டுள்ளன.

வருகிற ஆகஸ்டு மாதத்தில், மாநிலம் தழுவிய ரீதியில் விவசாயத் தொழிலாளர்கள் கூலி உயர்வு போராட்டம் நடத்துவதற்கு திட்டமிடப்பட்டுள்ளது.

வலது கம்யூனிஸ்டுகள் 'முற்போக்கு, முற்போக்கு' என்று தலையில் தூக்கி வைத்துக் கொண்டாடும் பகுகுணா அரசாங்கம் இவ்வாறு விவசாயத் தொழிலாளர்களுக்கு எதிரான நடவடிக்கை எடுத்திருப்பது, உ. பி. நிலப்பிரபுக்களை பாதுகாக்கத்தான்.

உ. பி. அரசின் இந்த முடிவை ஜனசங்கம், ஸ்தாபன காங்கிரஸ், பாரதீயகிராந்திதளம் ஆகிய கட்சிகள் ஆதரித்துள்ளன என்பது மிகவும் குறிப்பிடத்தகுந்தது.

வர்க்க பாசம் யாரை விட்டது!

# சிக்கிம் நிகழ்ச்சிகள்

சிக்கிமில் தற்போது நிலவுகின்ற சோக்கியால் மன்னரின் அரசு, காலத்திற்கொவ்வாத, தொன்மையானதொரு அமைப்பின் சின்னமாக இருக்கிறது. இத்தகையதொரு அமைப்பு சிக்கிமில் நீடிக்கும் வரை, அங்கு ஜனநாயக இயக்கத்தின் முன்னேற்றத்திற்கான பாதை தெளிவடைவது என்பது முடியாத காரியமே.

## சிக்கிம் மக்கள் வெற்றி

கடந்த வருடம் சிக்கிம் மக்கள் சோக்கியால் மன்னரின் சட்டஅமைப்பு ஒழிக்கப்பட வேண்டும் என்று கோரினர். அமெரிக்க சி ஐ ஏ ஊடுருவல்காரர்களாலும் அவர்களுடைய அமெரிக்க எஜமானர்களாலும் சோக்கியால் மன்னரைக் காப்பாற்ற முடியவில்லை. ஆனால் இந்திய அரசாங்கத்தின் தலையீட்டிற்குப் பிறகு, சோக்கியால தனது தந்திரங்களை மாற்றிக் கொண்டார். தேர்தல்கள் நடத்தி, ஜனநாயக அமைப்பு முறையை ஏற்படுத்தும் வகையில் புதியதொரு அரசியல் சட்டத்தை ஏற்க அவர் சம்மதித்தார். சுருக்கமாகச் சொல்ல வேண்டுமானால், தான் ஒரு சட்டப்பூர்வமான முடி மன்னராகத் திகழ்வதற்குரிய ஏற்பாடுகளை செய்து கொண்டார்.

## சோக்கியாலின் முட்டுக்கட்டை

அதன்படி தேர்தல்கள் நடந்தன. சிக்கிம் காங்கிரஸ எனனும் கட்சி 32 இடங்களில் 31ஐ கைப்பற்றியது. பிறகு அரசியல் சட்டம் உருவாக்கப்பட்டு, அதனை ஏற்றுக் கொள்ள அசெம்பிளி கூட்டப்பட வேண்டியிருந்தது இந்த சமயத்தில்தான் சோகியால மனனர் முட்டுக் கட்டை போடும் தன்னுடைய தந்திரங்களை ஆரம்பித்தார். முதலில் அசெம்பிளியைக் கூட்ட விடாமல் தடுக்க முயற்சித்தார். ஆனால் அசெம்பிளி கூட, அரசியல் சட்டத்தை ஏற்றுக் கொண்ட பிறகு, தமக்கு கால அவகாசம் வேண்டுமென்றும், சட்டத்தில் ஒரு சில திருத்தங்களைச் செய்ய வேணடும என்றும் அவர் விரும்பினர். அந்த முடிவுடன் அவர் புதுடில்லிக்கு விரைந்தோடி வந்தார்,

ஆனால் சோக்கியாலின் முட்டுக்கட்டை முயற்சிகள் இத்துடன் நின்று விடப் போவதில்லை. ஒவ்வொரு வழியிலும், தன்னுடைய யதேச்சதிகார ஆட்சியை நிலைநிறுத்த கட்டாயம் முயற்சிக்கவே செய்வார். அவர் எப்போது விரட்டப்படுகிறாரோ, அப்போதுதான் சிக்கிம் மக்களுக்கும், அவர்களுடைய ஜனநாயக இயக்கத்தின் முன்னேற்றத்திற்கும் நல்ல வழி ஏற்படும்.

இதற்கு முன்பு, சோக்கியால் மன்னர் பல்வேறு சிறுபான்மையோரை ஒருவருக்கொருவர் மோதவிடும் சூழ்ச்சிகளில் ஈடுபட்டு வந்தார். இப்போது சிக்கிம் காங்கிரஸ் கூறிவரும் ஒரு சில யோசனைகளைப் பயன்படுத்திக் கொண்டு, சிக்கிம் ''தனித் தன்மை''யின் பாதுகாவலன் தானே என்று பாசாங்கு செய்கிறார். அந்த சிக்கிம காங்கிரஸ் கூறியிருக்கும் ஆலோசனைகள் என்ன?

சிக்கிம் நாட்டின் நீதி பரிபாலனத்தை இந்திய சுப்ரீம் நீதிமன்றத்திற்கு உட்படுத்துவது என்றும்,சிக்கிம் மக்களுக்கு இந்திய அரசியல், நாடாளுமன்ற துறைகளில் பிரதிநிதித்துவம் தரவேண்டுமென்றும், சிக்கிம் மக்கள் இந்திய அரசியல், நாடாளுமன்ற துறைகளில் கலந்து கொள்ளுவதற்கு ஏற்பாடு செய்ய வேண்டும் என்றும் சிக்கிம காங்கிரஸ் ஆலோசனை கூறியிருக்கிறது.

## சிக்கிம் மக்களுக்கு உரிமை வேண்டும்

ஆனால் சோக்கியாலுக்கு இந்திய அரசாங்கம் எந்தவிதமான சலுகையினையும் தரக்கூடாது. அவர் தன்னுடைய போக்கை மாற்றிக்கொண்டு திருந்தாத வரை, அவரை நீக்குவதற்கு சிக்கிம மக்களுக்கு எல்லா உரிமைகளும் உண்டு,

அதே சமயம் இந்தியா, சிக்கிம்ஆகிய இரு நாட்டு மக்களுக்கும் இருக்கவேண்டிய நல்லுறவுகளின பொருட்டு, சிக்கிம் நாடானது இந்திய யூனியனின் ஒருமாநிலமாக மாற்றப்பட்டு விட்டது என்ற ஒரு தப்பபிப்பிராயம் சிக்கிம் மக்களின் எந்த ஒரு பிரிவினரது மத்தியிலும் ஏற்படும் வகையில் எதுவும் சொல்லக்கூடாது, எதுவும் செய்யக்கூடாது. சிக்கிமின் தனித்தன்மைக்கு முழு உத்திரவாதம் அளிக்கப்பட வேண்டும.

## காங்.ஆட்சியாளர்களின் ஜனநாயகக் கொலை

தங்களுடைய ஜனநாயகத்தை உத்திரவாதப்படுத்த சிக்கிம் மக்கள் இந்திய காங்கிரஸ் ஆட்சியாளர்களை நம்ப முடியாது. காங்கிரஸ் ஆட்சியாளர்களின் கைகளில் ஜனநாயகமே பலி கடாவாகியிருக்கிறது. மேற்கு வங்கத்தில் நடந்தது போன்று தேர்தல்களே முழுக்க முழுக்க மோசடி செய்யப்பட்டுள்ளன; அரைப் பாசிசபயங்கரம் தலைவிரித்தாடுகிறது. சமீபத்திய இரயில்வே வேலைநிறுத்தத்தில் நாம்பார்த்த பயங்கரத்தைப் போன்று, உழைக்கும் மக்கள் ஈவு இரக்கமற்ற முறையில் நசுக்கப்படுகின்றனர். இவைகள் எல்லாம்காங்கிரஸ் ஆட்சியாளர்களின் கொள்கைகளே. இத்தகைய ஜனநாயகக் கொலைகளை நடத்தி வரும் காங்கிரஸ் ஆட்சியாளர்கள் சிக்கிமிலோ அல்லது வேறு எங்குமோ ஜனநாயகத்தை பாதுகாத்து விட முடியாது.

சிக்கிம் மக்கள், தாங்கள் இப்போது பெற்றிருக்கின்ற சிறிதளவு ஜனநாயகத்தையாவது பாதுகாக்க வேண்டுமானால்—அந்த ஜனநாயகத்தை விரிவுபடுத்தவேண்டுமானால் — தங்களுடைய சொந்த பலத்தைத் தவிர வேறு யாரையும் நம்பியிருக்க கூடாது.ஜனநாயகத்தின் மீது வரும் எந்த ஒரு தாக்குதலுக்கும் எதிராக மிகவும் விழிப்புடன் இருக்க வேண்டும். இதுதான் நமது விருப்பம்.

—★ பீப்பிள்ஸ் டெமாக்ரசி ★—

## நடக்க இருப்பவை

சின்னக்காமன் பட்டியில்
(சாத்தூர் தாலுகா)
14—7—74 மாலையில்
போ. பெருமாள்சாமி
தலைமையில்

எஸ். ஏ. பெருமாள்
சி. செல்லச்சாமி
க. அ. வி. வீரப்பன்
பேசுவர்

மதுரை குமார் குழு
இன்னிசை நடைபெறும்

# நிக்சன் மீண்டும் சீனு செல்வார்?

வாஷிங்டன், ஜுலை. 11—
தற்போது மாஸ்கோவுக்கு சென்றுவந்த அமெரிக்க ஜனாதிபதி நிக்சன், சீனுவுக்கும் வெகு விரைவில் செல்வார் என்று தெரிகிறது.

இந்த வருடக் கடைசியில் நிக்சன் சீனுவுக்கு இரண்டாம் தடவையாக மீண்டும் செல்லலாம் என்று அமெரிக்க பத்திரிகை ஒன்று தெரிவித்துள்ளது.

சீனுவுடன் தூதரக மட்டத்தில் விரைவில் அமெரிக்கா உறவுகொள்ள வேண்டும் என்று சமீபத்தில் சீனு சென்று வந்த அமெரிக்க செனட்டர் ஒருவர் கருத்து தெரிவித்துள்ளார்.

P&T DEPARTMENT

Executive Engineer, P&T Electrical Division, Madras invites tenders upto 30-7-74 for Providing E.I & Fans in P&T Staff quarters at Madurai (24 Nos typE—I, 40 Nos type—II, 4 Nos. type—III and 2 Nos type—IV) Estd Cost: RS. 32, 447|-

Conditions and tender form can be had from his office or P&T Electrical Sub Division, Madras up to 3 p.m. on 29—7—74 on production of enlistment certificate and current income—tax clearance certificate &RS 5—20 by cash orM, O·Fordetails see Indian Trade Journal of 10/ 17-7-74.

— davp 710(249)/74

# ஊழல் புகார்
## 5 இந்திரா காங்கிரஸ் அமைச்சர்கள் மீது விசாரணை

கல்கத்தா, ஜுலை. 11—
மேற்கு வங்கத்தில் இந்திரா காங்கிரஸ் அமைச்சர்கள் 5 பேர்மீதுள்ள ஊழல் புகார்களை விசாரிக்க வாஞ்சு தலைமையில் ஒரு கமிஷன் அமைக்கப்பட்டுள்ளது.

இத்தகவலை, மோசடித் தேர்தல் மூலம் மேற்கு வங்கத்தில் ஆட்சியில் அமர்ந்துள்ள முதலமைச்சர் சித்தார்த்த சங்கர்ரே சட்டமன்றத்தில்அறிவித்துள்ளார்.

லஞ்சம் வாங்கியதாகவும் உறவினர்களுக்குச் சலுகை காட்டியதாகவும் இவர்கள் மீது புகார்கள் கூறப்பட்டுள்ளன.

## மாதர் மாநாட்டுக்கு பிரதிநிதிகள்

மதுரை, ஜுலை. 10—
மதுரையில் வருகிற 13, 14 ஆகிய தேதிகளில் நடைபெறும் மதுரை—முகவை மாவட்ட ஜனநாயக மாதர் சங்க மாநாட்டுக்கு, 14-வதுவார்டு கிளை சார்பில் செயலாளர் கி. செல்லத்தாயி அம்மாள், துணைச் செயலாளர் புஷ்பம் மணி, பொருளாளா முத்தாயி அம்மாள் ஆகியோர் பிரதிநிதியாகத்தேர்ந்தெடுக்கப்பட்டுள்ளனர்.

## தமிழ்நாடு மின்சாரத் தொழிலாளர் மத்திய அமைப்பு
# மாநில 2-வது மாநாடு

ஜுலை 13, 14. தேதிகளில் திருநெல்வேலி ஜங்ஷன்
கருணாநிதி கல்யாண மண்டபத்தில்
தியாகி மதுரை ராமசாமி நினைவு அரங்கில் நடக்கிறது

தோழர் சி.கோவிந்தராஜன் தலைமையில்,
**தோழர் பி. ராமமூர்த்தி**
துவக்கி வைப்பார்
தோழர் ஏ. நல்லசிவன் கொடியேற்றி வைப்பார்.

**தோழர்கள்**
கே. ரமணி, ஆர். உமாநாத், வி. பி. சிந்தன்,
து. ஜானகிராமன், ஜெ. ஹேமச்சந்திரன்,
சு. பாலவிநாயகம்
மற்றும் பல தலைவர்கள் சிறப்புரையாற்றுவர்.

**அணிவகுப்பு:**
14-ந் தேதி மாலை 3 மணிக்கு, நெல்லை டவுனிலிருந்து மாபெரும் அணிவகுப்பு புறப்படும்.

இந்திய கமயூனிஸ்ட் கட்சி (மார்க்சிஸ்ட்) தமிழ் மாநிலக்குழு சார்பில் தீக்கதிர் அச்சகத்தில் (6/16 பைபாஸ் ரோடு மதுரை,625018) அச்சிட்டு வெளியிடுபவர் ஆசிரியர் கே. முத்தையா.